குணலயர்.—அண்ணே, வேசையரால் குலமக்களுக் குண்டாகும் துன்ப மிவ்வளவென்று சொல்லிமுடியுமோ ; புத்திகெட்ட மனிதர்க ளிப்படி கெட்டுப்போவதனால் அவர்களுடைய பெண்சாதி பிள்ளைகளெல்லாம் பெரும்பாலு மாதரவற் றலை வதைப்பாற்கிலும் பரிதாபமான விஷய மெங்கேயிருக்கிறது.

நிபுணர்.—அண்ணே, பிரதாபசந்திரர் கிரகசாரம்போதாமல் தவ றிப்போனதுமுதல் இதுவரையி லிந்த விஷயங்களையெல்லாம் நன்றாய்த் தெரிந்துகொண்டார் ; பழம்புண்ணாளி பரிகாரி யென்பதுபோல் எல்லோருக்கும் புத்திசொல்லு மனுபவத் தையு மடைந்தார். ஆனா லினியொரு விஷயத்தைமாத்திர மவரனுபவத்தி லொப்பிட்டுப் பார்க்கவேண்டியது.

விருத்தம்.

வேசையர் வலையிற் பட்டே வெந்துய ரடைத லுக்கும்
ஆசைகொள் மனைவி யோடு மடையுமா னந்தத் திற்கும்
பேசொணா வகையி லென்றும் பேதமுண் டென்னும் வார்த்தை
நேசரு மினிமேற் காண்பர் நெஞ்செலாங் குளிரத் தானே.

லவுகீகர்.-

வகையறி யாதுட் பட்ட மடையரை முன்செ லுத்தி
நகைசெயும் வேசை மார்தம் நஞ்சமார் நெஞ்சத் திற்கும்
தகையுள பெண்டீர்க் குற்ற சத்திய நெறிய தற்கும்
வெகுவித வித்தியா சங்க ளென்பது விளங்குந் தானே.

குணலயர்.—

பொருளொடு புகழும் போகப் புருஷரைக் கெடுத்தே யப்பால்
அருளினுக் கிசையா வண்ண மாக்குமவ் வேசை யர்க்கும்
மருளிலா அன்பி லுற்ற மனைமக்க ளுக்கும் கையில்
உருளுமா மலகம் போல வுணருவார் பேத மின்றே.

பஞ்சணை மீது பெண்டு பானபோ ஜனத்தி லன்னை
அஞ்சிலாச் சுகத்தில் தோழி யரும்பிணி யுற்றால் தெய்வம்
கொஞ்சலிற் கிள்ளை நீதி கூறலில் அமைச்சன் போலும்
வஞ்சியை மனைவி யென்றே வாழ்த்துவர் மேலோர் தாமே.

அண்ணே உங்களுக்கப்படியே வாய்த்திருக்கிறது.

(வித்தியாசாகரர் முதலிய எல்லோரும் சேர்ந்து,)

விருத்தம்.

ஆழிசே ருலகி லெங்கு மடையொணு மனைவி யோடும்
தாழ்விலா நண்பரோடுஞ் சகலமா நிதிக ளென்றும்
சூழவே யெல்லை யில்லாச் சுகந்தனை யனுப வித்து
வாழிநம் பிரதாப சந்திர மகிபதி வாழி வாழி!

முற்றிற்று.

PRINTED BY V. RAMASAWMY SASTRULU & SONS, AT THE
SARASWATY NILAYA PRESS, 69, *Malia Perumall Street, MADRAS—1914.*